ஊட்டுட்டின்பொருட்டு சிறுபுலியூரிலும் சிற்ருனைச்சூரிலும் நில நிவந்தம் அளித்துள்ள கல்வெட்டுப் பகுதியால் அறியக் கிடக்கின்றது.

**திருமூலர்கோயில் கல்வெட்டு :**

மேற்படி விழா முடிவுநாளாகிய புரட்டாசிப் பூரட்டாதி நாளில் திருமூல நாயனரது நாடகமும் ஆரியக்கூத்து ஏழு அங்கமும் நடத்தப்பெற்றுவந்தன. இச் செய்தி இக்கோயில் கர்ப்பக்கிருகத்தின் மேற்குப்புறச் சுவரில் பொறிக்கப் பெற்றுள் ளது, முதலாம் இராசராசசோழதேவரது ஒன்பதாம் ஆண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டினல் புலப்படுகின்றது.

**மகாமண்டபத்தைக் கட்டியவன் :**

இக்கோயில் மகாமண்டபத்தைக் கட்டியவன் இளங்காரி குடையான் சங்கரதேவன் ஆவான். இத்திருப்பணிக்குத் திரு வெண்காடு உடையான் அனங்கனும் உதவி செய்துள்ளான் இவைகளை இம்மண்டபத்தின் உள்பக்கத்தில் இருக்கும் தூண் ஒன்றில் "ஸ்வதிஸ்ரீ இத்திருமண்டபம் இளங்காரிமுடையான் சங்கரதேவன்" என்னும் கல்வெட்டாலும்; இம்மகாமண்டபத் தின் தென்பக்கமுள்ள ஒரு தூணின் போதியக் கட்டையில் உள்ள "இக்கல் திருவெண்காடு உடையான் அனங்கன் திருப் பணி என்னும் கல்வெட்டாலும் அறியலாம்.

**திருமடங்கள் :**

இவ்வூரில் முதற்குலோத்துங்க சோழன் காலத்தில் திரு நீலவிடங்கன் மடம், திருவீதிமடம், நாற்பத்தெண் ணுயிரவர் மடம், என்னும் பெயருள்ள திருமடங்கள் பல இருந்தன.

**அறச்சாலைகள் :**

இவ்வூரில் விக்கிரமசோழன் காலத்தில் பெருந்திருவாட்டி அறச்சாலை, சங்கர தேவன் அறச்சாலை, முந்நூற்று அறுபத்து நால்வன் அறச்சாலை என்னும் அறச்சாலைகள் இருந்தன. இவற்றுள் பெருந்திருவாட்டி என்னும் அறச்சாலை, கங்கை கொண்ட சோழபுரத்துக் கங்கை கொண்ட சோழன் திருக் கொற்றவாசலில் புறவாயில் சேனபதியாக இருந்த இளங்காரி குடையான் சங்கரன் அம்பலன் கோயில் கொண்டானை அனந்தபாலன் என்பவனல் நிறுவப்பெற்றதாகும்.

சங்கரதேவன் அறச்சாலை திருவாவடுதுறை உடையார் கோயில் சிவலோக நாயகன் திருவாசலின் முன்பக்கத்தில்

இருந்தது. மேற்குறித்த மடங்களிலும் அறச்சாலைகளிலும் திருவாவடுதுறை உடையார் திருநாளில் அடியார்களுக்கும், தபசிகளுக்கும் அனாதைகளுக்கும் அமுது அளிக்கப்பெற்று வந்தன. முந்நூற்று அறுபத்து நால்வன் அறச்சாலையில் *மருத்துவநூல் படிப்பவர்களுக்கும், இலக்கணம் படிப்பவர்களுக்கும் அமுது அளிக்கப்பெற்று வந்த செய்தி குறிப்பிடத் தக்கதாகும். இவைகளன்றி முதலாம் இராஜேந்திரசோழன் கல்வெட்டில் சர்வதேவன் திருமடம் என்றும் குறிக்கப்பெற்றுள்ளது.

**நடனசாலை :**

இத்திருக்கோயிலில் முதற்குலோத்துங்க சோழன் காலத்தில் நாலுவித நடனசாலை என்னும்பெயருள்ள நடனஅரங்கம் இருந்ததாக அறியப்படுகிறது.

**நிவந்தங்கள் :**

இக்கோயிலைக் கட்டிய கற்றளிப்பிச்சன் திருப்பதியம் பாடுவார் ஒருவர்க்கும்; திருமஞ்சன மாட்டுவார்க்கும், உவச்சர்களுக்கும், மடத்துக்கும் சிற்றூனச்சூரில் நிலம் வாங்கி அளித்துள்ளான். கோப்பரகேசரிவர்மா அதாவது முதற்பராந்தக சோழன் காலத்தில் இந்நிவந்தம் செய்யப்பெற்றதாகும்.

**இதை உணர்த்தும் கல்வெட்டு பின்வருமாறு :**

''ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரிவன்மற்கியாண்டு (மூன்று) வது திருவாவடுதுறை கற்றளிபிச்சநேன். சிற்றூனச்சூரனுன் விலைக்கறக் கொண்டு மேற்புலத்து வடக்கடையைத் திருப் பதியம் பாடுவாரொருவற்கு அறுமாவும். இதன் தெற்கடை காற்செய திருமஞ்சனமட்டுவார்க்குக் காலும் இதன் தெற் கடையைத் திருஉவச்சர்களுக்குக் காணிமடத்துக்கும் காலுமாக நிவந்தஞ்செய்து குடுத்தேன். கற்றளிப்பிச்சனின் இது பன் மாஹேஸ்வர ரக்ஷை.

(இக்கல்வெட்டு அர்த்த மண்டபத்தின் கிழக்குப் புறச் சுவரில் வாசலுக்கும் துவாரபாலகர்க்கும் வடபால் இருக்கின்றது.

**திருமூலர் நாடகம் நடிக்கவும் ஆரியக்கூத்து ஏழு அங்கம் ஆடுவதற்கும் அளித்த நிவந்தங்கள்:**

இந்தச் செய்தி முதலாம் இராஜராஜசோழனின் ஒன்பதாமாண்டுக் கல்வெட்டில் உள்ளது.

திருவாவடுதுறை உடையாரின் திருவிழா முடிவு நாளில் அதாவது புரட்டாசி மாதம் பூரட்டாதி நட்சத்திரத்தன்று திருமூலநாயனாரது நாடகம் நடித்தல்; ஆரியக்கூத்து ஏழு அங்கம் ஆடுதல் இவைகளைப் பற்றி முன்னர்க் கூறப் பெற்றுள்ளது. அவைகளை அக்காலத்தே நடித்தவர்வடுகமாங் குடி பாண்டிகுலாசனி ஆவர். அவர்க்குப்பின் அவைகளை நடித்தவர் சாக்கையர் குமரன் சீகண்டவன் ஆவர். அவை களின் பொருட்டு சீகண்டனுக்குச் சாத்தனூர் சபையார் தங்கள் ஊரில் இருந்த அறச்சாலை அம்பலத்தில் கூட்டம் குறைவறக் கூடியிருந்து தென்கரை சாக்கைவேலி ஆன நில அளவுப்படி அரையே இரண்டுமாவும், திரு ஆவடுதுறை ஆழ்வார் தேவ தானம் நெற்குப்பை பதிற்றுவேலியினும் கிழக்கடையமாம் பள்ளி வாய்க்காலுக்கு வடக்குநிலம் முக்காலும் ஆக நிலம் ஒன்றே எழுமாவை நிர்த்தபோக அளித்திருந்தனர்.

### விக்கிரமபாண்டியன் சந்தி :

விக்கிரமபாண்டியன் தான் பிறந்த அஸ்த நட்சத்திரத்தில் தன்பேரால் கட்டின விக்கிரம பாண்டியன் சந்திக்கு அமுது படி, சாத்துபடி உள்ளிட்ட நிவந்தங்களுக்கு உடலாக விருத ராச பயங்கர வளநாட்டுக் கஞ்சனூர்ப்பற்றுத் தென்பால் திரைலோக்கியான வீருதராச பயங்கரச் சதுர்வேதிமங்கலத் துக் குலோத்துங்கசோழன் பெருவழிக்கு உட்பட்ட திறப்பில் இருபது வேலியும், துறைசையார் அகரமான இராசேந்திர சோழச் சதுர்ப்பேதிமங்கலத்துப் பிடாகை கூத்தனூர் கொடி யாலத்து விட்ட நிலம் பதிற்று வேலியும், வேணவரை நல்லூ ரில் நான்கு வேலியும் ......... ராட்சதச்சதுப் பேதிமங்கலத்துப் பிடாகையூரிலும் அனபாய சதுர்ப்பேதிமங்கலத்துப் பிடாகை கண்டியூரிலும் நிலம் இருபத்தாறு வேலியும் ஆக நிலம் அறுபதிற்றுவேலியைக் கொடுத்திருந்தான். மேற்குறித்த இவைகளின்றித் திருவாவடுதுறை ஆழ்வார்க்கு சங்கராந்தி தோறும் முக்குறுணி நெல்லின் அரிசியால் அமுது செய்விப் பதற்கும் இரண்டு அயன சங்கராந்திக்கும் நூற்றெட்டு கலசத் தில் ஸ்நபனம் செய்விக்கவும் வடகரை தேவதானம் கார் நாட்டுத் தனிக்கடம்பூர் உடையான் கண்ணி புலியூர் நக்கர் அளித்த எண்கழஞ்சு பொன் கொண்டு மூன்றுமா நிலம் வாங்கி அளிக்கப் பெற்றிருந்தது. இதுபோலவே இன்னும் பல நிவந்தங்களாம்.

**வைத்தியத்திற்கு அளிக்கப்பெற்ற நிவந்தம் :**

உய்யக் கொண்டார் வளநாட்டு சோழேந்திர சிங்கமலத்து சவர்னன் அரையன் சங்கரனுன உத்தமசோழ அசலரைய னுக்கும் அவன் வம்சத்தார்க்கும் திருவாவடுதுறையில் வைத்தியஞ்செய்து கொண்டு உண்ணும்பொருட்டு ஆழ்வார் ஸ்ரீ பராந்தக ஸ்ரீ குந்தவைப் பிராட்டியார் இராஜேந்திரசிம்ம வளநாட்டு இன்னம்பர் நாட்டுப் (தற்போது இன்னம்பூர் என வழங்கப்படுகிறது) பழைய வானவன் மாதேவி சதுர்வேதி மங்கலத்துச் சடையாரிடத்தில் நூற்று இருபது காசுகொடுத்து நிலம் எட்டு மாக்காணி முந்திரிகைக்கீழ் அரையும் குழி ஒன்றும் மனை இரண்டும் வாங்கி அளித்துள்ளனர். இந் நிகழ்ச்சி முதலாம் இராசேந்திர சோழனது நான்காம் ஆண்டில் நிகழ்ந்ததாகும்.

**திருவாவடுதுறையைத் தன்னகத்துக்கொண்ட வளநாடு :**

இவ்வூரைத் தன்னகத்துக்கொண்ட வளநாடு உய்யக் கொண்டார் வளநாடாகும். இந்நாடு காவிரிக்கும் அரிசி லாற்றுக்கும் இடைப்பட்ட நிலப்பரப்பை உடையது. இது ஆக்கூர்நாடு, அம்பர்நாடு, குறும்பூர்நாடு, மருகல்நாடு, பாம்பூர்நாடு, தென்கரைத் திரைமூர்நாடு, திருநறையூர் நாடு திருவழுந்தூர்நாடு, வெண்ணாடு. விளநாடு, பேராவூர்நாடு என்னும் பிரிவுகளை உடையதாய் இருந்தது.

**திருவாவடுதுறை தன்னகத்துக்கொண்ட நாடு ;**

திரு ஆவடுதுறை உய்யக்கொண்டார் வளநாட்டின் பிரிவு களில் ஒன்றாகிய தென்கரைத் திரைமூர் நாட்டிற்கு உட்பட்ட தாகும். நெற்குப்பை, சாத்தனூர், நடார். நல்லுச்சேரி, திருக் குரங்காடுதுறை, மகேந்திரமங்கலம் என்னும் ஊர்கள் இந் நாட்டிற்கு உட்பட்ட சில ஊர்கள் எனக் கல்வெட்டுக்கள் அறி விக்கின்றன.

**பிற செய்திகள் ;**

வடக்கு தேவகோஷ்டத்தில் உள்ள அஷ்டபுஜ துர்க்கா பரமேஸ்வரியின் திருமேனிக்குக் கிழக்குப்பக்கமாக உள்ளதும், சில பகுதிகளை சுவரில் வைத்துக் கட்டப்பெற்றதும் ஆகிய கல் வெட்டில் கோப்பரகேசரி பன்மரபான உடையார் காவேரி கரைகண்ட கரிகால சோழதேவர் என்று ஒரு சோழ அரசர் குறிக்கப்பெற்றுள்ளனர். இக் கல்வெட்டின் தொடக்கத்தில்

'தேவற்குயாண்டு நாலாவது தென்கரை திருவழுந்தூர் நாட்டு 'வாய்தலைப்படி குலையரையரோம் உடையார் திருவாவடுதுறை உடையார்க்கு நாங்கள் கைநீட்டு இட்டுக்கொடுத்த பரிசாவது'' எனக் குறிக்கப்பெற்றுள்ளது. இதில் வாய்தலைப் படி குலையரையர்' என்பவர் ஒரு சபையினர் என்பது உறுதி. அவர்கள் எவ்வேலையைக் கண்காணித்து வந்தனர் என்பது புலப்படவில்லை.

இக்கோயிலிலுள்ள பொன் ஆபரணங்கள் குடிஞைக் கல்லாலும், வெண்கல உருக்கள் வெள்ளிக் கோலாலும், பித்தளை உருக்கள் மாண்டினாலும் நிறுக்கப்பெற்று வந்தன. ''வெள்ளிக் கோலால் நிறை தொளாயிரத்திருபத்தைம்பலநே கைசு (கஃசு)'' என்னும் தொடர்களால் அக்காலத்தில் பலம் தான் உயர்ந்த நிறுத்தல் அளவை என்பதும் கஃசுதான் மிகச் சிறியது என்பதும் பெறப்படுகின்றன.

கோயில் காரியங்களின் பொருட்டு ஊர்ச்சபையார், திருவாவடுதுறை உடையார் கோயில் வடப்பக்கத்து உலகளந்தான் என்று பேர் கூறப்பட்ட மாடத்தில் கூட்டங் குறைவறக் கூடியிருந்தும், சங்கரதேவன் மண்டபத்தே கூட்டங் குறைவறக் கூடியிருந்தும் கவனித்து வந்தனர்.

சாத்தனூர்க்குச் சதுர்வேதிமங்கலம் என்று பெயர் வழங்கி வந்ததாக முதலாம் இராஜேந்திரசோழ தேவரின் கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளது. இந்த ஸ்ரீசதுர்வேதி மங்கலத்துக்கு வடக்கில் சிற்றுனைச்சூர் என்னும் ஊர் இருந்தது.

(மேற்படி கல்வெட்டுச்செய்திகளை 1953 வருடம் அண்ணாமலைப் பல்கலைக்கழகக் கல்வெட்டு அறிஞர் சுந்தரேசவாண்டையார் அவர்கள் இவ்வாதீனம் 21 வது பட்டம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் அருளாட்சிக் காலத்தில் திருமடத்திற்கு சமர்ப்பித்த கையெழுத்துப் பிரதிகளாக இவ்வாதீன சரஸ்வதிமகால் நூல்நிலையத்தில் அரிய கையெழுத்துப் பிரதிப்புலப் பிரிவில் பாதுகாக்கப்பட்டுள்ளன).

இவ்வாதீனத்து 22-வது பட்டம் ஸ்ரீ அம்பலவாண தேசிகர் அவர்களின் அருளாட்சிக் காலத்தில் 27—8—1972 அன்று இத் திருக்கோயில் ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் மிகச்சிறப்பான முறையில் நடைபெற்றது.



உ
சிவமயம்

# திருவாவடுதுறை தேவாரத் திருப்பதிகங்கள்

•–•–•–•–•–•–•–•

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

### 1. நாலடி மேல்வைப்பு பண் – காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

இடரினும் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்தநஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோ எமை யாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோஉன தின்னருள் ஆவடு துறையரனே. (1)

வாழினும் சாவினும் வருந்தினும்போய்
வீழினும் உனகழல் விடுவேனல்லேன்
தாழிளந் தடம்புனல் தயங்குசென்னிப்
போழிள மதிவைத்த புண்ணியனே
இதுவோஎமை யாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோஉன தின்னருள் ஆவடு துறையரனே. (2)

நனவினும் கனவினும் நம்பாஉன்னை
மனவினும் வழிபடல் மறவேன் அம்மான்
புனல்விரி நறுங்கொன்றைப் போதணிந்த
கனலெரி அனல்புல்கு கையவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோஉன தின்னருள் ஆவடு துறையரனே. (3)

தும்மலோ டருந்துயர் தோன்றிடினும்
அம்மலர் அடியலால் அரற்றுதென்நாக்
கைம்மல்கு வரிசிலைக் கணைஒன்றினால்
மும்மதில் எரியெழ முனிந்தவனே
இதுவோ எமை யாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோஉன தின்னருள் ஆவடு துறையரனே. (4)

கையது வீழினுங் கழிவுறினும்
செய்கழல் அடியலால் சிந்தைசெய்யேன்
கொய்யணி நறுமலர் குலாயசென்னி
மையணி மிடறுடை மறையவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோஉன தின்னருள் ஆவடு துறையரனே. (5)

வெந்துயர் தோன்றியோர் வெருவுறினும்
எந்தாய்உன் அடியலால் ஏத்தாதென்னா
ஐந்தலை அரவுகொண் டரைக்கசைத்த
சந்தவெண் பொடியணி சங்கரனே
இதுவோஎமை யாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோஉன தின்னருள் ஆவடு துறையரனே. (6)

வெப்பொடு விரவியோர் வினைவரினும்
அப்பாஉன் னடியலால் அரற்றாதென்னா
ஒப்புடை ஒருவனை உருவழிய
அப்படி அழலெழ விழித்தவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோஉன தின்னருள் ஆவடு துறையரனே. (7)

பேரிடர் பெருகியோர் பிணிவரினும்
சீருடைக் கழல்அலாற் சிந்தைசெய்யேன்
ஏருடை மணிமுடி இராவணனை
ஆரிடர் படவரை யடர்த்தவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோஉன தின்னருள் ஆவடு துறையரனே. (8)

உண்ணினும் பசிப்பினும் உறங்கினும்நின்
ஒண்மலர் அடியலால் உரையாதென்னாக்
கண்ணனும் கடிகமழ் தாமரைமேல்
அண்ணலும் அளப்பரி தாயவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோஉன தின்னருள் ஆவடு துறையரனே. (9)

பித்தொடு மயங்கியோர் பிணிவரினும்
அத்தாஉன் அடியலால் அரற்றுதென்நாப்
புத்தருஞ் சமணரும் புறனுரைக்கப்
பத்தர்கட் கருள்செய்து பயின்றவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோஉன தின்னருள் ஆவடு துறையரனே. (10)

அலைபுனல் ஆவடு துறைஅமர்ந்த
இலைநுனை வேற்படை எம்இறையை
நலம்மிகு ஞானசம் பந்தன்சொன்ன
விலையுடை அருந்தமிழ் மாலைவல்லார்
வினையாயின நீங்கிப்போய் விண்ணவர் வியனுலகம்
நிலையாகமுன் னேறுவர் நிலமிசை நிலையிலரே. (11)

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு நாயனார்

### 2. திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

மாயிரு ஞால மெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கை யாளைப் படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க் கம்பொன்
ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடு துறைய னாரே. (1)

மடந்தைபா கத்தர் போலும் மான்மறிக் கையர் போலும்
குடந்தையிற் குழகர் போலும் கொல்புலித் தோலர் போலும்
கடைந்தநஞ் சுண்பர் போலும் காலனைக் காய்வர் போலும்
அடைந்தவர்க் கன்பர் போலும் ஆவடு துறைய னாரே. (2)

உற்றநோய் தீர்ப்பர் போலும் உறுதுணை யாவர் போலும்
செற்றவர் புரங்கள் மூன்றும் தீயெழச் செறுவர் போலும்
கற்றவர் பரவி யேத்தக் கலந்துலந் தலந்து பாடும்
அற்றவர்க் கன்பர் போலும் ஆவடு துறைய னாரே. (3)

மழுவமர் கையர் போலும் மாதவள் பாகர் போலும்
எழுநுனை வேலர் போலும் என்புகொண் டணிவர் போலும்
தொழுதெழுந் தாடிப் பாடித் தோத்திரம் பலவுஞ் சொல்லி
அழுமவர்க் கன்பர் போலும் ஆவடு துறைய னாரே. (4)

பொடியணி மெய்யர் போலும் பொங்குவெண் ணூலர் போலும்
கடியதோர் விடையர் போலும் காமனைக் காய்வர் போலும்
வெடிபடு தலையர் போலும் வேட்கையால் பரவுந் தொண்டர்
அடிமையை அளப்பர் போலும் ஆவடு துறைய னாரே. (5)

வக்கரன் உயிரை வவ்வக் கண்மலர் கொண்டு போற்றச்
சக்கரம் கொடுப்பர் போலும் தானவர் தலைவர் போலும்
துக்கமா மூடர் தம்மைத் துயரிலே வீழ்ப்பர் போலும்
அக்கரை யார்ப்பர் போலும் ஆவடு துறைய னாரே. (6)

விடைதரு கொடியர் போலும் வெண்புரி நூலர் போலும்
படைதரு மழுவர் போலும் பாய்புலித் தோலர் போலும்
உடைதரு கீளர் போலும் உலகமு மாவர் போலும்
அடைபவர் இடர்கள் தீர்க்கும் ஆவடு துறைய னாரே. (7)

முந்திவா னோர்கள் வந்து முறைமையால் வணங்கி யேத்த
நந்திமா காள ரென்பார் நடுவுடை யார்கள் நிற்பச்
சிந்தியா தேயொ ழிந்தார் திரிபுரம் எரிப்பர் போலும்
அந்திவான் மதியம் சூடும் ஆவடு துறைய னாரே (8)

பானம ரேனமாகிப் பாரிடந் திட்ட மாலும்
தேனமர்ந் தேறும் அல்லித் திசைமுகம் உடைய கோவும்
தீனரைத் தியக்க றுத்த திருவுரு வுடையர் போலும்
ஆனரை யேற்றர் போலும் ஆவடு துறைய னாரே. (9)

பார்த்தனுக் கருள்வர் போலும் படர்சடை முடியர் போலும்
ஏத்துவார் இடர்கள் தீர இன்பங்கள் கொடுப்பர் போலும்
கூத்தராய்ப் பாடி யாடிக் கொடுவலி யரக்கன் தன்னை
ஆர்த்தவா யலறு விப்பார் ஆவடு துறைய னாரே. (10)

திருச்சிற்றம்பலம்

கார்க்கொள் மாமுகில் போல்வதோர் கண்டத்தன்
வார்க்கொண் மென்முலை சேர்ந்திறு மாந்திவள்
ஆர்க்கொள் கொன்றையன் ஆவடு தண்டுறைத்
தார்க்கு நின்றவள் தாழுமா காண்மினே. (4)

கருகு கண்டத்தன் காய்கதிர்ச் சோதியன்
பருகு பாலமு தேனும் பண்பினன்
அருகு சென்றிலள் ஆவடு தண்டுறை
ஒருவன் என்னை உடையகோ என்னுமே. (5)

குழலும் கொன்றையும் கூவிள மத்தமும்
தழலும் தையலோர் பாகமாத் தாங்கினன்
அழகன் ஆவடு தண்டுறை யாளனக்
கழலும் கைவளை காரிகை யாளுக்கே. (6)

பஞ்சின் மெல்லடிப் பாவையோர் பங்கனைத்
தஞ்ச மென்றிறு மாந்திவள் ஆரையும்
அஞ்சுவா ளல்லள் ஆவடு தண்டுறை
மஞ்ச னேடிவள் ஆடிய மையலே. (7)

பிறையுஞ் சூடிநற் பெண்ணொ டாணுகிய
நிறையும் நெஞ்சமும் நீர்மையுங் கொண்டவன்
அறையும் பூம்பொழில் ஆவடு தண்டுறை
இறைவன் என்னை உடையவன் என்னுமே. (8)

வையந் தானளந் தானும் அயனுமாய்
மெய்யைக் காணலுற் றார்க்கழ லாயினன்
ஐயன் ஆவடு தண்டுறை யாளனக்
கையில் வெள்வளை யுங்கழல் கின்றதே. (9)

பக்கம் பூதங்கள் பாடப் பலிகொள்வான்
மிக்க வாளரக் கன்வலி வீட்டினன்
அக்க ணிந்தவன் ஆவடு தண்டுறை
நக்கன் என்னுமிந் நாணிலி காண்மினே. (10)

திருச்சிற்றம்பலம்

## 5. திருத்தாண்டகம்

### திருச்சிற்றம்பலம்

நம்பனை நால்வேதங் கரைகண் டானை
ஞானப் பெருங்கடலை நன்மை தன்னைக்
கம்பனைக் கல்லா லிருந்தான் தன்னைக்
கற்பகமா யடியார்கட் கருள்செய் வானைச்
செம்பொன்னைப் பவளத்தைத் திரளு முத்தைத்
திங்களை ஞாயிற்றைத் தீயை நீரை
அம்பொன்னை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. (1)

மின்னானை மின்னிடைச்சேர் உருமி னானை
வெண்முகிலா யெழுந்துமழை பொழிவான் தன்னைத்
தன்னானைத் தன்னொப்பா ரில்லா தானைத்
தாயாகிப் பல்லுயிர்க்கோர் தந்தை யாகி
என்னானை எந்தை பெருமான் தன்னை
இருநிலமும் அண்டமுமாய்ச் செக்கர் வானே
அன்னானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. (2)

பத்தர்கள் சித்தத்தே பாவித் தானைப்
பவளக் கொழுந்தினை மாணிக் கத்தின்
தொத்தினைத் தூநெறியாய் நின்றான் தன்னைச்
சொல்லுவார் சொற்பொருளின் தோற்ற மாகி
வித்தினை முளைக்கிளையை வேரைச் சீரை
வினைவயத்தின் தன்சார்பை வெய்ய தீர்க்கும்
அத்தனை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. (3)

பேணியநற் பிறைதவழ்செஞ் சடையி னானை
பித்தராம் அடியார்க்கு முத்தி காட்டும்
ஏணியை இடர்க்கடலுட் சுழிக்கப் பட்டிங்
கிளைக்கின்றேற் கக்கரைக்கே ஏற வாங்கும்
தோணியைத் தொண்டனேன் தூய சோதிச்
சுலாவெண் குழையானைச் சுடர்பொற் காசின்
ஆணியை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. (4)

ஒருமணியை உலகுக்கோர் உறுதி தன்னை
உதயத்தி னுச்சியை உருமா னானைப்
பருமணியைப் பாலோடஞ் சாடி னானைப்
பவித்திரனைப் பசுபதியைப் பவளக் குன்றைத்
திருமணியைத் தித்திப்பைத் தேன தாகித்
தீங்கரும்பின் இன்சுவையைத் திகழுஞ் சோதி
அருமணியை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. (5)

ஏற்றானை எண்டோ ளுடையான் தன்னை
எல்லி நடமாட வல்லான் தன்னைக்
கூற்றானைக் கூற்றம் உதைத்தான் தன்னைக்
குரைகடல்வாய் நஞ்சுண்ட கண்டன் தன்னை
நீற்றானை நீளரவொன் றார்த்தான் தன்னை
நீண்ட சடைமுடிமேல் நீரார் கங்கை
ஆற்றானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே.(6)

கைம்மான மதகளிற்றை உரித்தான் தன்னைக்
கடல்வரைவான் ஆகாச மானான் தன்னைச்
செம்மானப் பவளத்தைத் திகழும் முத்தைத்
திங்களை ஞாயிற்றைத் தீயா னானை
எம்மானை என்மனமே கோயி லாக
இருந்தானை என்புருகும் அடியார் தங்கள்
அம்மானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. (7)

மெய்யானைப் பொய்யரொடு விரவா தானை
வெள்ளடையைத் தண்ணிழலை வெந்தீ யேந்தும்
கையானைக் காமனுடல் வேவக் காய்ந்த
கண்ணானைக் கண்மூன் றுடையான் தன்னைப்
பையா டரவமதி யுடனே வைத்த
சடையானைப் பாய்புலித்தோ லுடையான் தன்னை
ஐயானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே. (8)

வேண்டாமை வேண்டுவதும் இல்லான் தன்னை
விசயனைமுன் அசைவித்த வேடன் தன்னைத்
தூண்டாமைச் சுடர்விடுநற் சோதி தன்னைச்
சூலப் படையானைக் காலன் வாழ்நாள்
மாண்டோட உதைசெய்த மைந்தன் தன்னை
மண்ணவரும் விண்ணவரும் வணங்கி யேத்தும்
ஆண்டானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே.(9)

பந்தணவு மெல்விரலாள் பாகன் தன்னைப்
பாடலோ டாடல் பயின்றான் தன்னைக்
கொந்தணவு நறுங்கொன்றை மாலை யானைக்
கோலமா நீல மிடற்றான் தன்னைச்
செந்தமிழோ டாரியனைச் சீரி யானைத்
திருமார்பில் புரிவெண்ணூல் திகழப் பூண்ட
அந்தணனை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே.(10)

தரித்தானைத் தண்கடல்நஞ் சுண்டான் தன்னைத்
தக்கன்றன் பெருவேள்வி தகர்த்தான் தன்னைப்
பிரித்தானைப் பிறைதவழ்செஞ் சடையி னானைப்
பெருவலியால் மலையெடுத்த அரக்கன் தன்னை
நெரித்தானை நேரிழையாள் பாகத் தானை
நீசனேன் உடலுறுநோ யான திர
அரித்தானை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே (11)

திருச்சிற்றம்பலம்

## 6. திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

திருவேயென் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதி மிக்க
உருவேஎன் உறவேஎன் ஊனே ஊனின்
உள்ளமே உள்ளத்தி னுள்ளே நின்ற
கருவேஎன் கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. (1)

மாற்றேன் எழுத்தஞ்சும் என்றன் நாவில்
மறவேன் திருவருள்கள் வஞ்ச நெஞ்சின்
ஏற்றேன் பிறதெய்வம் எண்ணா நாயேன்
எம்பெருமான் திருவடியே எண்ணின் அல்லால்
மேற்றான்நீ செய்வனகள் செய்யக் கண்டு
வேதனைக்கே இடங்கொடுத்து நாளும் நாளும்
ஆற்றேன் அடியேனை அஞ்சேல் என்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. (2)

வரையார் மடமங்கை பங்கா கங்கை
மணவாளா வார்சடையாய் நின்றன் நாமம்
உரையா உயிர்போகப் பெறுவே னாகில்
உறுநோய்வந் தெத்தனையும் உற்றால் என்னே
கரையா நினைந்துருகிக் கண்ணீர் மல்கிக்
காதலித்து நின்கழலே ஏத்தும் அன்பர்க்
கரையா அடியேனை அஞ்சேல் என்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. (3)

சிலைத்தார் திரிபுரங்கள் தீயில் வேவச்
சிலைவளைவித் துமையவளை அஞ்ச நோக்கிக்
கலித்தாங் கிரும்பிடிமேற் கைவைத் தோடும்
களிறுரித்த கங்காளா எங்கள் கோவே
நிலைத்தார் அவர்தமக்கே பொறையாய் நாளும்
நில்லா உயிரோம்பும் நீதனேன் நான்
அலுத்தேன் அடியேனை அஞ்சேல் என்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. (4)

நறுமா மலர்கொய்து நீரில் மூழ்கி
நாடோறும் நின்கழலே ஏத்தி வாழ்த்தித்
துறவாத துன்பம் துறந்தேன் தன்னைச்
சூழுலகில் ஊழ்வினைவந் துற்றால் என்னே
உறவாகி வானவர்கள் முற்றும் வேண்ட
ஒலிதிரை நீர்க் கடல்நஞ்சுண் டுய்யக் கொண்ட
அறவா அடியேனை அஞ்சேல் என்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. (5)

கோன்நா ரணன் அங்கம் தோள்மேற் கொண்டு
கொழுமலரான் தன்சிரத்தைக் கையில் ஏந்திக்
கானார் களிற்றுரிவைப் போர்வை மூடிக்
கங்காள வேடராய் எங்கும் செல்வீர்

நானுர் உமக்கோர் வினைக்கே டனேன்
நல்வினையும் தீவினையும் எல்லாம் முன்னே
ஆனுய் அடியேனை அஞ்சேல் என்னுய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. (6)

உழைஉரித்த மானுரிதோல் ஆடை யானே
உமையவள்தம் பெருமானே இமையோர் ஏறே
கழையிறுத்த கருங்கடல்நஞ் சுண்ட கண்டா
கயிலாய மலையானே உன்பால் அன்பர்
பிழைபொறுத்தி என்பதுவும் பெரியோய் நின்றன்
கடனன்றே பேரருளுன் பால தன்றே
அழையுறுத்து மாமயில்கள் ஆலும் சோலை
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. (7)

உலந்தார் தலைகலனென் றேந்தி வானோர்
உலகம் பலதிரிவாய் உன்பால் அன்பு
கலந்தார் மனங்கவரும் காத லானே
கனலாடும் கையவனே ஐயா மெய்யே
மலந்தாங் குயிர்ப்பிறவி மாயக் காய
மயக்குளே விழுந்தழுந்தி நாளும் நாளும்
அலந்தேன் அடியேனை அஞ்சேல் என்னுய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. (8)

பல்லார்ந்த வெண்டலை கையி லேந்திப்
பசுவேறி ஊரூரன் பலிகொள் வானே
கல்லார்ந்த மலைமகளும் நீயும் எல்லாம்
கரிகாட்டில் ஆட்டுகந்தீர் கருதி ராகில்
எல்லாரும் என்றன்னை இகழ்வர் போலும்
ஏழை அமண் குண்டர்சாக் கியர்க ளொன்றுக்
கல்லாதார் திறத்தொழிந்தேன் அஞ்சேல் என்னுய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. (9)

துறந்தார்தம் தூநெறிக்கண் சென்றே னல்லேன்
துணைமாலை சூட்டநான் தூயேன் அல்லேன்
பிறந்தேன்நின் திருவருளே பேசின் அல்லால்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே
செறிந்தார் மதில் இலங்கைக் கோமான் தன்னைச்
செறுவரைக்கீழ் அடர்த்தருளிச் செய்கை எல்லாம்
அறிந்தேன் அடியேனை அஞ்சேல் என்னுய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே. (10)

**திருச்சிற்றம்பலம்**

## சுந்தரமூர்த்தி நாயனர்

### 7. பண் – தக்கேசி

திருச்சிற்றம்பலம்

மறைய வனெரு மாணிவந் தடைய
வர்ர மாயவ னுருயிர் நிறுத்தக்
கறைகொள் வேலுடைக் காலனைக் காலால்
கடந்த காரணம் கண்டுகண் டடியேன்
இறைவன் எம்பெரு மானென்றெப் போதும்
ஏத்தி ஏத்திநின் றஞ்சலி செய்துன்
அறைகொள் சேவடிக் கன்பொடு அடைந்தேன்
ஆவ டுதுறை ஆதியெம் மானே. (1)

தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி
சித்திரப் பந்தர் சிக்கென இயற்றச்
சுருண்ட செஞ்சடை யாயது தன்னைச்
சோழ னுக்கிய தொடர்ச்சிகண் டடியேன்
புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம்
போற்றி போற்றியென் றன்பொடு புலம்பி
அருண்டென் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவ டுதுறை யாதியெம் மானே. (2)

திகழு மாலவன் ஆயிர மலரால்
ஏத்து வானெரு நீண்மலர் குறையப்
புகழி னுலவன் கண்ணிடந் திடலும்
புரிந்து சக்கரம் கொடுத்தல்கண் டடியேன்
திகழு நின்திருப் பாதங்கள் பரவித்
தேவ தேவநின் திறம்பல பிதற்றி
அகழும் வல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவ டுதுறை யாதியெம் மானே. (3)

வீரத் தாலொரு வேடுவ னுகி
விசைத்தொர் கேழலைத் துரந்துசென் றணைந்து
போரைத் தான்விச யன்தனக் கன்பாய்ப்
புரிந்து வான்படை கொடுத்தல்கண் டடியேன்
வாரத் தாலுன நாமங்கள் பரவி
வழிபட் டுன்திற மேநினைந் துருகி
ஆர்வத் தோடும்வந் தடியிணை அடைந்தேன்
ஆவ டுதுறை ஆதியெம் மானே. (4)

ஒக்க முப்புர மோங்கெரி தூவ
உன்னை உன்னிய மூவர்நின் சரணம்
புக்கு மற்றவர் பொன்னுல காளப்
புகழி னுலருள் ஈந்தமை அறிந்து
மிக்க நின்கழ லேதொழு தரற்றி
வேதியா ஆதி மூர்த்திநின் அரையில்
அக்க ணிந்தஎம் மான்உனை அடைந்தேன்
ஆவ டுதுறை ஆதியெம் மானே. (5)

இந்தப் பதிகத்தில் 6, 7, 8, 9, 10 செய்யுள்கள் மறைந்துபோயின.

*திருச்சிற்றம்பலம்*

## 8. பண் - தக்கேசி

*திருச்சிற்றம்பலம்*

கங்கை வார்சடை யாய்கண நாதா
காலகாலனே காமனுக்கனலே
பொங்குமாகடல் விடமிடற்றானே
பூதநாதனே புண்ணியாபுனிதா
செங்கண்மால்விடை யாய்தெளி தேனே
தீர்த்தனேதிரு வாவடுதுறையுள்
அங்கணா எனை அஞ்சலென் றருள்வாய்
ஆரெனக்குற வமரர்களேறே. (1)

மண்ணின் மேல்மயங் கிக்கிடப்பேனை
வலியவந்தெனை ஆண்டுகொண்டானே
கண்ணிலேனுடம் பில்லடுநோயால்
கருத்தழிந்துனக் கேயொற்றையானேன்
தெண்ணிலா எறிக் குஞ்சடையானே
தேவனேதிரு வாவடுதுறையுள்
அண்ணலேஎனை அஞ்சலென் றருளாய்
ஆரெனக்குற வமரர்களேறே. (2)

ஒப்பிலாமுலை யாளொருபாகா
 உத்தமாமத்த மார்தருசடையாய்
முப்புரங்களைத் தீவளைத்தங்கே
 மூவருக்கருள் செய்யவல்லானே
செப்ப ஆல்நிழற் கீழிருந்தருளும்
 செல்வனேதிரு வாவடுதுறையுள்
அப்பனே என்னை அஞ்சலென்றருளாய்
 ஆரெனக்குற வமரர்களேறே. (3)

கொதியினால்வரு காளிதன்கோபம்
 குறையஆடிய கூத்துடையானே
மதியிலேனுடம் பில்லடுநோயால்
 மயங்கினேன்மணி யேமணவாளா
விதியினாலிமை யோர்தொழுதேத்தும்
 விகிர்தனேதிரு வாவடுதுறையுள்
அதிபனே என்னை அஞ்சலென்றருளாய்
 ஆரெனக்குற வமரர்களேறே. (4)

வந்தவாளரக் கன்வலிதொலைத்து
 வாழுநாள்கொடுத் தாய்வழிமுதலே
வெந்தவெண்பொடிப் பூசவல்லானே
 வேடனாய்விச யற்கருள்புரிந்த
இந்துசேகர னேஇமை யோர்சீர்
 ஈசனேதிரு வாவடுதுறையுள்
அந்தணா என்னை அஞ்சலென்றருளாய்
 ஆரெனக்குற வமரர்களேறே. (5)

குறைவிலாநிறை வேகுணக்குன்றே
 கூத்தனேகுழைக் காதுடையானே
உறவிலேனுனை யன்றிமற்றடியேன்
 ஒருபிழைபொறுத் தாலிழிவுண்டே
சிறைவண் டார்பொழில் சூழ்திருவாரூர்ச்
 செம்பொனேதிரு வாவடுதுறையுள்
அறவனே என்னை அஞ்சலென்றருளாய்
 ஆரெனக்குற வமரர்களேறே. (6)

வெய்யமாகரி யீருரியானே
வேங்கையாடையி னுய்விதிமுதலே
மெய்யனேயட லாழியன்றரிதான்
வேண்டநீகொடுத் தருள்புரிவிகிர்தா
செய்யமேனிய னேதிகழொளியே
செங்கணுதிரு வாவடுதுறையுள்
ஐயனேஎனை அஞ்சலென்றருளாய்
ஆரெனக்குற வமரர்களேறே. (7)

கோதிலாவமுதே அருள்பெருகு
கோலமேஇமை யோர்தொழுகோவே
பாதிமாதொரு கூறுடையானே
பசுபதிபர மாபரமேட்டீ
தீதிலாமலை யேதிருவருள்சேர்
சேவகாதிரு வாவடுதுறையுள்
ஆதியேஎனை அஞ்சலென்றருளாய்
ஆரெனக்குற வமரர்களேறே. (8)

வானநாடனே வழித்துணைமருந்தே
மாசிலாமணி யேமறைப்பொருளே
ஏனமாவெயி றாமையும்எலும்பும்
ஈடுதாங்கிய மார்புடையானே
தேன்நெய்பால்தயிர் ஆட்டுகந்தானே
தேவனேதிரு வாவடுதுறையுள்
ஆனையேஎனை அஞ்சலென்றருளாய்
ஆரெனக்குற வமரர்களேறே. (9)

வெண்டலைப்பிறை கொன்றையும் அரவும்
வேரிமத்தமும் விரவிமுன்முடித்த
இண்டை மாமலர்ச் செஞ்சடையானை
ஈசனைத்திரு வாவடுதுறையுள்
அண்டவாணனைச் சிங்கடியப்பன்
அணுக்கவன்றொண்டன் ஆர்வத்தாலுரைத்த
தண்டமிழ்மலர் பத்தும்வல்லார்கள்
சாதலும்பிறப் பும்அறுப்பாரே. (10)

திருச்சிற்றம்பலம்

## சேந்தனுர் திருவிசைப்பா

### திருவாவடுதுறை

### 9. பண் – பஞ்சமம்

*திருச்சிற்றம்பலம்*

பொய்யாத வேதியர் சாந்தைமெய்ப்
புகழாளர் ஆயிரம் பூசுரர்
மெய்யே திருப்பணி செய்சீர்
மிகுகா விரிக்கரை மேய
ஐயா திருவா வடுதுறை
அமுதேயென் றுன்னை அழைத்தக்கால்
மையார் தடங்கண் மடந்தைக்கொன்
றருளா தொழிவது மாதிமையே. (1)

மாதி மணங்கம ழும்பொழில்
மணிமாட மாளிகை வீதிசூழ்
சோதி மதிலணி சாந்தைமெய்ச்
சுருதி விதிவழி யோர்தொழும்
ஆதி அமரர் புராணனும்
அணிஆ வடுதுறை நம்பிநின்ற
நீதி அறிகிலள் பொன்னெடுந்
திண்தோள் புணர நினைக்குமே. (2)

நினைக்கும் நிரந்தர னேயென்னும்
நிலாக்கோலச் செஞ்சடைக் கங்கைநீர்
நனைக்கும் நலங்கிளர் கொன்றைமேல்
நயம்பேசும் நன்னுதல் நங்கைமீர்
மனக்கின்ப வெள்ள மலைமகள்
மணவாள நம்பிவண் சாந்தையூர்
தனக்கின்பன் ஆவடு தண்டுறைத்
தருணேந்து சேகரன் என்னுமே (3)

தருணேந்து சேகர னேயெனுந்
தடம்பொன்னித் தென்கரைச் சாந்தையூர்ப்
பொருணேர்ந்த சிந்தை யவர்தொழப்
புகழ்செல்வ மல்குபொற் கோயிலுள்

அருணோர்ந் தமர்திரு வாவடு
துறையாண்ட ஆண்டகை யம்மானே
தெருணோர்ந்த சித்தம் வலியவா
திலக நுதலி திறத்திலே. (4)

திலக நுதல்உமை நங்கைக்கும்
திருவா வடுதுறை நம்பிக்கும்
குலக அடியவர்க் கென்னையாட்
கொடுத்தாண்டு கொண்ட குணக்கடல்
அலதொன் றறிகின்றி லேமெனும்
அணியும்வெண் ணீறஞ் செழுத்தலால்
வலதொன் றிலள்இதற் கென்செய்கேன்
வயல்அந்தண் சாந்தையர் வேந்தனே. (5)

வேந்தன் வளைத்தது மேருவில்
அரவுநாண் வெங்கணை செங்கண்மால்
போர்ந்த மதிலணி முப்புரம்
பொடியாட வேதப்புர வித்தேர்ச்
சாந்தை முதல்அயன் சாரதி
கதிஅருள் என்னுமித் தையலை
ஆந்தண் திருவா வடுதுறை
யான்செய்கை யார்அறி கிற்பாரே. (6)

கிற்போம் எனத்தக்கன் வேள்விபுக்
கெடுத்தோடிக் கெட்டஅத் தேவர்கள்
சொற்போலும் மெய்ப்பயன் பாவிகாள்
என்சொல்லிச் சொல்லும்இத் தூமொழி
கற்போல் மனங்கனி வித்தஎம்
கருணையா வந்திடாய் என்றால்
பெற்போ பெருந்திரு வாவடு
துறையாளி பேசா தொழிவதே. (7)

ஒழிவொன் றிலாஉண்மை வண்ணமும்
உலப்பிலள் ஊறின்ப வெள்ளமும்
மொழிவொன் றிலாப்பொன்னித் தீர்த்தமும்
முனிகோடி கோடியா மூர்த்தியும்

அழிவொன் றி லாச்செல்வச் சாந்தையூர்
அணிஆ வடுதுறை ஆடினுள்
இழிவொன் றி லாவகை யெய்திநின்
றிறுமாக்கும் என்னிள மானனே. (8)

மானேர் கலைவளை யுங்கவர்ந்
துளங்கொள்ளை கொள்ள வழக்குண்டே
தேனே அமுதேஎன் சித்தமே
சிவலோக நாயகச் செல்வமே
ஆனேஅ லம்பு புனற்பொன்னி
அணிஆ வடுதுறை அன்பர்தம்
கோனேநின் மெய்யடி யார்மனக்
கருத்தை முடித்திடுங் குன்றமே. (9)

குன்றேந்தி கோகன கத்தயன்
அறியா நெறியென்னைக் கூட்டினாய்
என்றேங்கி ஏங்கி அழைக்கின்றாள்
இளவல்லி எல்லைக டந்தனள்
அன்றே அலம்பு புனற்பொன்னி
அணிஆ வடுதுறை யாடினுள்
நன்றே இவள்நம் பரமல்லள்
நவலோக நாயகன் பாலளே. (10)

பாலும் அமுதமும் தேனுமாய்
ஆனந்தந் தந்துள்ளே பாலிப்பான்
போலும்என் ஆருயிர்ப் போகமாம்
புரகால காம புராந்தகன்
சேலுங் கயலுந் திளைக்கும்நீர்த்
திருவா வடுதுறை வேந்தனோ(டு)
ஆலு மதற்கே முதலுமாம்
அறிந்தோம் அரிவைபொய் யாததே. (11)

திருச்சிற்றம்பலம்

# அருணகிரிநாதர் திருப்புகழ்

தத்த தன தான தனத்தனத் தத்த தத்த
தத்த தன தான தனத்தனத் தத்த தத்த
தத்த தன தான தனத்தனத் தத்த தத்த தனதான

சொற்பிழைவ ராமல் உனைக்கனக் கத்து தித்து
நிற்பதுவ ராத பவக்கடத் திற்சு ழற்றி
சுக்கிலவ தார வழிக்கிணக் கிக்க ளித்து விலைமாதர்

துப்பிறைய தான இதழ்க்கனிக்குக் கருத்தை
வைத்துமய லாகி மனத்தைவிட்டுக் கடுத்த
துற்சனம காத கரைப்புவிக் குட்டழைத்த நிதிமேவு

கற்பக விராச னெனப்படைக்குப் பெருத்த
அர்ச்சுனந ராதி யெனக்கவிக் குட்பதித்து
கற்றறிவி னுவை யெடுத்தடுத் துப்படித்து மிகையாகக்

கத்திடுமெ யாக வலிக்கலிப் பைத்தொ லைத்து
கைப்பொருளி லாமை யெனைக்கலக் கப்படுத்து
கற்பனைவி டாமல் அலைத்திருக்கச் சலிக்க விடலாமோ

எற்பணிய ராவை மிதித்துவெட் டித்துவைத்து
பற்றியக ராவை யிழுத்துரக்கக் கிழித்து
எட்கரிப டாமல் இதத்தபுத் திக்கதிக்கு நிலையோதி

எத்தியப சாசின் முகைக்குடத் தைக்குடித்து
முற்றுயிரி லாமல் அடக்கிவிட் டுச்சிரித்த
இற்கணையி ராமர் சுகித்திருக் கச்சினத்த திறல்வீரா

வெற்பனம தாணி நிறுத்துருக் கிச்சமைத்து
வர்க்கமணி யாக வடித்திருத் தித்தகட்டின்
மெய்க்குலம தாக மலைக்கமுத் தைப்பதித்து வெகுகோடி

விட்கதிர தாக நிகர்த்தொளிக் கச்சிவந்த
ரத்தினப டாக மயிற்பரிக் குத்தரித்து
மிக்கதிரு வாவ டுதுறைக் குட்செழித்த பெருமாளே.

தான தானன தானன தத்தன
தான தானன தானன தத்தன
தான தானன தானன தத்தன தனதான

சோதி மாமதி போல்முக முங்கிளர்
மேரு லாவிய மாமுகை யுங்கொடு
தூர வேவரும் ஆடவர் தங்கள்முன் எதிராயே

சோலி பேசிமுன் னுளிலி ணங்கிய
மாதர் போலிரு தோளில்வி ழுந்தொரு
சூதி னுல்வர வேமனே கொண்டவ ரொடுமேவி

மோதி யேகனி வாயத ரந்தரு
நாளி லேபொருள் சூறைகள் கொண்டுபின்
மோன மாயவ மேசில சண்டைக ளுடனேகி

மோச மேதரு தோதக வம்பியர்
மீதி லேமய லாகிம னந்தளர்
மோட னுகிய பாதக னுங்கதி பெறுவேனே

ஆதி யேயெனும் வானவர் தம்பகை
யான சூரனே மோதிய ரும்பொடி
யாக வேமயி லேறிமு னிந்திடு நெடுவேலா

ஆயர் வாழ்பதி தோறுமு கந்துர
லேறி யேயுறி மீதனே யுங்கள
வர்க வேகொடு போதநு கர்ந்தவன் மருகோனே

வாதி னுல்வரு காளியை வென்றிடு
மாதி நாயகர் வீறுத யங்குகை
வாரி ராசனு மேபணி யுந்திரு நடபாதர்

வாச மாமல ராளெடு செந்திரு
மார்பில் வீறிய மாயவ னும்பணி
மாசி லாமணி ஈசர்ம கிழ்ந்தருள் பெருமாளே.

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்

தேவாதி தேவன்சொல் வேதாக மங்களைத்
திருமந்த்ர மாலையென்றே
திகழ்சமா தியிலிருந் துலகத்துள் அருள்விழி
திறந்தாண் டினுக்கொன்றெனும்

பாவாக வேசொன்ன பரமசிவ முனைகுரு
பணியோக அட்டாங்கமும்
பகர்வரிய சித்தியும் திரிகால ஞானமும்
பரிபக்கு வர்க்கருளுவோன்

சேவேறும் ஒருவனே பரமதத் துவமெனும்
திருமூல நாதன்மகிழ்
திருவிசைப் பாவென்னும் அதிமதுர கவிபாடு
திருமாளி கைத்தேவர்வாழ்

காவேரி சூழ்ந்ததிரு வாவடுது றைக்குமர!
கனிவாயின் முத்தமருளே
கங்கா நதிச்சரவ ணத்துவளர் காங்கேய!
கனிவாயின் முத்தமருளே,

— சிதம்பரநாதமுனிவர்.






## திருவாவடுதுறை ஆதீன வெளியீடுகள்.

| | | | |
|---|---|---|---|
| 326 | பதினொராந்திருமுறை 2-ம் தொகுதி | ரூ. | 1—75 |
| 328 | ,, 3-ம் தொகுதி | ரூ. | 1—50 |
| 329 | ,, 4-ம் தொகுதி | ரூ. | 2—00 |
| 330 | ,, 5-ம் தொகுதி | ரூ. | 2—00 |
| 332 | நல்லூர்த்தலவரலாறு | ரூ. | 1—00 |
| 333 | ஸ்ரீ மாசிலாமணிப்பெருமான் சகஸ்ரநாமாவளி | ரூ. | 1—50 |
| 334 | திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி குறிப்புரையுடன் | ரூ. | 1—00 |
| 335 | ஸ்ரீமத் மாதவச் சிவஞானயோகிகள் புகழ்மாலை | ரூ | 1—50 |
| 336 | தொண்டர்தம் பெருமை | ரூ. | 1—50 |
| 339 | கணபதி வரலாறு | ரூ. | 1—50 |
| 337 | சிவஞானபோதமும், மாதவச் சிவஞானயோகிகள் பொழிப்புரையும் | ரூ. | 1—00 |
| 338 | சிவாலய பூஜை விளக்கம் (தொகுப்பு நூல்) | ரூ. | 2—00 |
| 340 | சரஸ்வதி அந்தாதி (உரையுடன்) | ரூ. | 1—00 |
| 341 | பொதிகை பாபநாசம் (தலவரலாறு) | ரூ. | 2—00 |
| 344 | சைவ அநுட்டான விதி - படங்களுடன் | ரூ, | 3—00 |
| 345 | திருவீழிமிழலை வீழிநாதஸ்வாமி அஷ்டோத்திரம் சகஸ்ரநாமம், தல வரலாறு, பதிகங்கள் | ரூ. | 5—50 |

*அஞ்சற்செலவு பிரதி ஒன்றுக்கு 25 காசுகள்.*

| | | | |
|---|---|---|---|
| 331 | சம்பந்தர் தேவாரம் 2-ஆம் திருமுறை | ரூ. | 5—50 |
| 342 | திருவாசகம் | ரூ. | 7—00 |
| 343 | சம்பந்தர் தேவாரம் 3-ஆம் திருமுறை | ரூ. | 15—00 |
| 347 | ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் அருளிய உரைச் செய்யுள் | ரூ, | 8—00 |
| 349 | அகத்தியர் தேவாரத்திரட்டு ( குறிப்புரையுடன் ) | ரூ, | 4—50 |

*(அஞ்சற்செலவு ஷிபிரதி 1க்கு 50 காசுகள்)*

| | | | |
|---|---|---|---|
| 100 | கணபதி (வண்ணப் படங்களுடன்) | ரூ. | 20—00 |

*(ரெகார்டு அஞ்சற்செலவு ரூ. 4—50)*

**பணவிடை (M. O.) மூலம் அனுப்பிப்பெறலாம்.**

**மேலாளர்,**

**மெய்கண்டார் அலுவலகம், திருவாவடுதுறை—609 803.**



திருவாவடுதுறை
ஸ்ரீ கோமுக்தீஸ்வரர் திருக்கோயில் திருநந்திதேவர்